19th February 1959]

**SRI M. ETHIRAJALU :** ஆகவே, மனிதர்களுக்குப் பயன் படும் தொழிலைச் செய்யக்கூடிய சலவைத் தொழிலாளர்களுக்கு அத் தொழிலைச் செய்யக் கருவிகள் வாங்குவதற்கு ஏன் சர்க்கார் கடன் கொடுக்கக்கூடாதென்று கேட்கிறேன் ?

**THE HON. SRI R. VENKATARAMAN :** அங்கத்தினர் ஸ்ரீ எத்திராஜுலு அவர்கள் இவ்வளவு பெரிய பிரசங்கம் செய்யாமலேயே, எனக்குத் தூய வெள்ளைச் சட்டை போட்டுக்கொள்ளத்தான் பிடிக்கும். ஆகவே, இந்தத் தொழிலின் முக்கியத்துவத்தை யாரும் எடுத்துச் சொல் லத் தேவையில்லை. **State Aid to Industries Act** படி இன்னின்ன காரியங்களுக்குக் கடன் கொடுக்க வேண்டுமென்று திட்டம் வகுக்கப்பட் டிருக்கிறது. " காட்டேஜ் இன்டஸ்ட்ரீஸ் ", " வில்லேஜ் இன்டஸ்ட்ரீஸ் " அவ சியமான பொருள்களைச் செய்து விற்பனை செய்ய, மக்களுக்கு உபயோகமா மாக இருக்க அவர்களுக்கு உதவி கொடுக்கப்பட்டு வருகிறது. ஆகவே, சலவைத் தொழிலுக்கும் க்ஷவரத் தொழிலுக்கும் இதைக் கொடுக்க அனுமதி கொடுக்கவில்லை.

*Low Income Group Housing Scheme*

* 77 *Q*.—SRI V. V. RAMASWAMI : Will the Hon. the Minister for Industrties be pleased to state— 3-20 p.m.

(*a*) whether there is any proposal before the Government to increase the subsidy given by the State Government in regard to Low Income Group Housing Scheme;

(*b*) whether any increased subsidy will be received from the Centre; and

(*c*) the measures proposed to be adopted for persuading employers to build more houses for their workers?

THE HON. SRI R. VENKATARAMAN : (*a*) No, Sir. Under the Low Income Group Housing Scheme, only loans are given for construction of houses. No subsidy is given under the scheme.

(*b*) Does not arise.

(*c*) Financial assistance is given to employers under the Subsidized Industrial Housing Scheme to enable them to construct houses for their workers. As the response from the employers was poor, the pattern of assistance under the scheme was liberalized in 1958, to encourage them. A conference of representatives of employers and workers was also held that year to persuade them to build more houses. The position will be reviewed this year and suitable steps will be taken in the above direction.

**SRI V. V. RAMASWAMI :** தலைவர் அவர்களே, இந்தமாதிரியான குறைந்த வருமானக்காரர்களுக்குப் போடப்படும் திட்டத்திற்கு மத்திய அரசாங்கத்திலிருந்து ஏதாவது பண உதவி கிடைக்கின்றதா ? அவ்விதம் வருகிறது என்றால், அந்தப் பணம் பூராவும் செலவு செய்யப்பட்டு வருகிறதா ? அல்லது குறைவாகத்தான் செலவு செய்யப்பட்டு வருகிறதா ?

**THE HON. SRI R. VENKATARAMAN :** இப்போது மத்திய அரசாங் கத்திலிருந்து கொடுக்கப்படும் பணம் போதவில்லை. 1958–59-ல் மத்திய அரசாங்கத்திலிருந்து கிடைத்ததைவிடக் கூடுதலாகவே நாம் செலவு செய் திருக்கிறோம். இவைகளுக்கு நாம் பட்ஜெட்டில் கணக்குக் கொடுக்க வில்லை.

[19th February 1959

VIDWAN T. MUTHUKANNAPPAN : எவ்வளவு வருமானத்திற்குக் குறைந்தவர்கள் இந்த "லோ" இன்கம் க்ரூப்-இல் சேர்க்கப்படுகிறார்கள் ?

THE HON. SRI R. VENKATARAMAN : வருஷத்திற்கு ஆறாயிரம் ரூபாய்க்குக் குறைவாக வருமானமுள்ளவர்கள் இதில் சேர்க்கப்படு கிறார்கள்.

SRI V. V. RAMASWAMI : மலைத் தோட்டங்களிலுள்ள தொழிலாளர் களுக்கும் இந்தத் திட்டம் வகுக்கப்படுமா ? கடன் கொடுக்கவேண்டும் என்று அவர்களிடத்திலிருந்து ஏதாவது மனுக்கள் வந்திருக்கின்றனவா ?

THE HON. SRI R. VENKATARAMAN : அவர்களுக்கும் கடன் கொடுப் பதற்கு வசதி செய்யப்பட்டிருக்கிறது. இதுவரை இந்த வருஷத்தில் மூன்று நான்கு மனுக்கள் வந்திருக்கின்றன.

VIDWAN T. MUTHUKANNAPPAN : இந்தத் திட்டங்களின்படி வேண்டிய பண உதவி பெறுவதற்கு அதிகமான காலதாமதம் ஏற்படு கிறது. அப்படி ஏற்படாமல் செய்வதற்கு அரசாங்கம் நடவடிக்கை எடுக்குமா ?

THE HON. SRI R. VENKATARAMAN : காலதாமதம் ஆகியிருந் தால் கூடுதலாக நாம் பணம் செலவு செய்திருக்க முடியாது.

SRI K. V. RAMASWAMY : விவசாயிகள் அவரவர்களுடைய நிலங் களில் மனைகள் கட்டிக்கொள்வதற்கு அவர்களுக்குக் கடன் கொடுப்பதற்கு இந்தத் திட்டத்தில் ஏற்பாடு செய்யப்பட்டிருக்கிறதா ?

THE HON. SRI R. VENKATARAMAN : அதற்கு வேறு திட்டம் இருக்கிறது. ரூரல் ஹவுஸிங் ஸ்கீம் என்று வேறு திட்டம் இருக்கிறது. அதைப்பற்றித் தனியாகக் கேள்வி போட்டால், விபரமாகப் பதில் தெரிவிக் கலாம்.

*Appointment of a Special Joint Registrar of Co-operative Societies*

* 78 Q.—SRI V. V. RAMASWAMI : Will the Hon. the Minister for Industries be pleased to state—

(a) whether it is a fact that the Government have sanctioned the appointment of a Special Joint Registrar of Co-operative Societies to study the various problems connected with the co-operative sugar mills; and

(b) if so, when the report will be submitted to the Government?

THE HON. SRI R. VENKATARAMAN : (a) Yes, Sir.

(b) The report of the Special Officer is likely to be submitted to the Government in March 1959.

SRI V. V. RAMASWAMI : ஏற்கனவே ஒவ்வொரு மாவட்டத்திற்கும் ஒவ்வொரு கூட்டுறவு டெபுடி ரிஜிஸ்டிரார் இருக்கும்போது, ஆலைகள் ஏற்படுத்துவதற்காக என்று தனியாக ஜாயிண்ட் ரிஜிஸ்டிரார் ஒரு வரை நியமிக்க வேண்டிய காரணம் என்ன ? என்னென்ன வேலைகளை இவர் பார்த்துவருவார் ?

THE HON. SRI R. VENKATARAMAN : சென்னை ராஜ்யத்திலே இப்போது மூன்று சர்க்கரை ஆலைகளை ஏற்படுத்துவதற்குத் திட்டமிட்டிருக் கிறோம். அதில் ஒவ்வொரு ஆலைக்கும் ஒரு கோடி ரூபாய் செலவாகும். மேலும், இந்த ஆலைகளுக்காக நிலங்கள் வாங்க வேண்டும். இதற்கான மெஷினரிகள் வரவழைக்க வேண்டும். மேலும் இது சம்பந்தமாக மத்திய சர்க்காரோடு கலந்து பலவிதமான நடவடிக்கைகள் எடுக்க வேண்டும். இவைகளையெல்லாம் கவனித்துக்கொள்வதற்குத்தான் ஜாயிண்ட் ரிஜிஸ்டிரார் நியமிக்கப்பட்டிருக்கிறார்.